THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) No, Sir.

*Agriculture College, Coimbatore*

* 789 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூரிலிருக்கும் விவசாயக் கல்லூரியோடு இணைக்கப்பட்டிருக்கும் எம்.எஸ்.ஸி,. பி.எச்.டி. போன்ற உயர்தர படிப்புக்கான கல்லூரியிலே மொத்தம் எத்தனை மாணவர்கள் சேர்க்கப்படுவார்கள் ?

(ஆ) இவர்களுள், தென்மண்டலப் பிரதேசங்கள் ஒவ்வொன்றிலிருந்தும் எத்தனை மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள் ?

(இ) இத்திட்டத்திற்காகும் ஆரம்ப மொத்தச் செலவினங்கள் எவ்வளவு ?

(ஈ) மத்திய சர்க்காரால் கொடுக்கப்பட்ட மான்யத் தொகை எவ்வளவு?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Forty.

(*b*) No quotas of seats have been fixed for individual States, but 50 per cent of the seats will be reserved for the students of States other than Madras including States outside the Southern Region.

(*c*) The total cost of the scheme is estimated at Rs. 8.95 lakhs recurring and Rs. 123.25 lakhs non-recurring over a period of 4 years against an anticipated receipt of Rs. 65,600 by way of collection of fees from the trainees.

(*d*) No grant has yet been given.

SRI P. G. MANICKAM : சார், மேற்கண்ட உயர்தர படிப்புக்கான டிப்ளோமா பெற ஒரு மாணவன் எத்தனை வருஷங்கள் அங்கு பயிற்சி எடுக்க வேண்டும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது "போஸ்ட் க்ராஜுவேட் கோர்ஸ்". இதிலே இரண்டு "டிகிரி கோர்சுகள்" இருக்கின்றன. டிப்ளோமா அல்ல. எம்.எஸ்.ஸி. டிகிரி ஒன்று. பி. எச். டி. டிகிரி ஒன்று. இது இரண்டு வருஷ கோர்ஸ்.

SRI T. S. RAMASWAMY PILLAI : இங்கு எம்.எஸ்.சி., பி.எச்.டி. என்று இரண்டு கோர்சுகள் இருப்பதாகச் சொன்னார்கள். பி.எச்.டி. கோர்ஸ் ஆரம்பிக்கப்பட்டு விட்டதா ? ஆரம்பிக்கவில்லை என்றால் ஏன் ? எம்.எஸ்.சி.-ல் என்னென்ன "சப்ஜக்டுகள்" ? அதிலே **Agronomy, Plant Physiology and Entomology** சேர்க்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (i) Agricultural Chemistry, Soil Science and Animal Science, (ii) Plant Pathology, (iii) Agricultural Bρtany, Genetics including Plant Breeding and Plant Physiology and (iv) Horticulture. Agronomy -ம், Entomolog-ம் இரண்டாவது வருஷத்தில் இருந்து ஆரம்பிக்கப்படும்.

SRI V. SUBBIAH : விவசாய எஞ்சினீயரிங் பிரிவில் படிக்கக்கூடியவர்கள் வெளி நாட்டுக்கு அனுப்பப்பட்டிருக்கிறார்களா ? எத்தனை பேர் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவசாய எஞ்சினீயரிங் இதிலே சேர்க்கப்படவில்லை.